ஓம்

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# முத்துத்தாண்டவர்



இஃது

யாழ்ப்பாணத்து நீர்வேலி

சிவசங்கரசிவப்பிரகாச பண்டிதர் அவர்களின்

புதல்வன்

பண்டித நடராஜபிள்ளையால்

இயற்றப்பெற்று

கொழும்பு

நேரு அச்சியந்திரசாலையில்

அச்சிடுவிக்கப்பெற்றது

1960

ஓம்

சிவமயம்,

திருச்சிற்றம்பலம்

# முத்துத்தாண்டவர்



இஃது

யாழ்ப்பாணத்து நீர்வேலி

சிவசங்கரசிவப்பிரகாச பண்டிதர் அவர்களின்

புதல்வன்

பண்டித நடராஜபிள்ளையால்

இயற்றப்பெற்று

கொழும்பு

நேரு அச்சியந்திரசாலையில்

அச்சிடுவிக்கப்பெற்றது

1960

இதன் விலை சதம் 80

# அணிந்துரை

*யாழ்ப்பாணம்*

இராமநாதன் கலாசாலை இசைக்கலைத் தலைவரும்

சங்கீத கலாநிதி, சங்கீத பூபதி என்னும் பட்ட

**வர்த்தனரும் ஆகிய**

**மகாராஜபுரம்**

# பிரம்மஸ்ரீ விஸ்வநாத ஐயரவர்கள்

**எழுதியது**

*கொழும்பில் வசிக்கும் யாழ்ப்பாணத்து* **ர்வேலிச் சங்கரபண்டிதர் மகன் சிவப்பிரகாச ண்டிதரின மகனாகிய பண்டிதர் நடராஜ பிள்ளை** *யவர்களால் எழுதப்பட்ட* **முத்துத்தாண்டவர்** *சரித்திரம் என்றும் இச்சிறுநூலைப் பார்த்தேன். நாஸ்த்திகம் பரவித் தலை விரிந்தாடும் இக்காலத்தில் இவ்விதமான நூல்கள் வெளி வருவது மிகவும் விரும்பத்தக்க தொன்றாகும் இந்நூலாசிரியர் இந்தத் தாண்டவருடன் சம்பந்தப்பட்ட சீர்காழி சிதம்பரம் என்னுந் திருத்தலங்களையும் அவ்வத்தலங்களின் தேவாரங்களிற் சிலவற்றையுஞ் சுட்டிக்காட்டி யிருக்கிறார்.*

*இதைக் கற்பவர்கள் பத்திவலையிற் புகுந்து ஆநந்த சாகரத்தில் நின்று ஆடுவார்கள் என்பதற்கையமில்லை பக்தர்கள் இந்நூலை வாங்கிப்படித்து இன்புறுவார்களாக.*

இங்ஙனம்

**மகாராஜபுரம்**

**5-10-60** **விசுவநாதய்யர்**

# யாழ்ப்பாணம்

பரமேஸ்வரக்கலாசாலை அதிபரும்

சேர். பொன்னம்பலம் இராமநாதனவர்களின்

மருமகனும் ஆகிய

## சு. நடேசபிள்ளை B. A. அவர்கள்

எழுதியது

முத்துத்தாண்டவர் இயற்றிய பதங்களும் கீர்த்தனைகளும் பக்திரசம் ததும்பும் இசைப் பாடல்களாகப் போற்றப்படுவன. முத்துத் தாண்டவரது சரித்திரத்தைச் சுருக்கமாகத் திரு. சி. நடராஜப்பண்டிதர் எழுதி வெளியிடு கின்றார். இதில் முத்துத்தாண்டவர் இயற்றிய சில கீர்த்தனங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இசையைத் துணையாகக் கொண்டு முத்துத் தாண்டவர் இறைவன் திருவடி எய்திய வரலா ற்றை இந்நூல் விளக்குகின்றது.

சு. நடேசபிள்ளை

16-12-60

உ

சிவமயம்

# உபோற்காதம்



பரந்த கடலினாற் சூழப்பட்ட இந்தப் பூவுலகமானது சுவாத்திய வேறுபாட்டினால் ஒன்றற்கொன்று முரணான நடை உடை பழக்கவழக்கம் என்பனவற்றையுடைய மக்கள் வசிக்கின்ற அநேக தேசங்களைத் தன்னகத்துட்கொண்டுள்ளது இந்த தேசங்கள் ஒவ்வொன்றிலும் பண்டு தொட்டுப் பேசப்பட்டு வழங்கிவந்த பாஷைகளே அவ்வத்தேசங்களின் பாஷைகளாகும். சில தேசங்களில் ஒன்றிற்கு மேற்பட்ட பாஷைகளும் பேசப்படுகின்றன. எனினும் ஏறக்குறைய நூற்றைம்பது வருடகாலமாக ஆங்கிலம் உலக மொழியாக எங்கும் பேசப்படுகின்றது. இதன் காரணமென்னையோவெனின் ஆங்கிலேயர் தங்கள் பலதிறமையாலே உலகம் முழுவதிலுமொவ்வோர் இடங்களைக்கைப்பற்றி வர்த்தகத்தை விருத்தி செய்து ஆங்காங்கு தங்களாதிக்கத்தை நிலை நிறுத்தியமையினாலும் இந்த ஆங்கிலம் கற்பவர்களுக்கு மிகுலகுவாக இருப்பதனாலுமேயாகும். அபிமானம் என்பது மானுடர்கள் யாவரிடத்திலுமுள்ள ஓர் குணமாகும், இது சாதியபிமானம் சமயாபிமானம் தேசாபிமானம் பாஷாபிமானம் எனப்பலதிறப்படும் இதுவரையிற் சிலவருஷங்களாக அந்நியர் ஆதிக்கத்தில் அடங்கி ஒடுங்கிக் கிடந்த கீழைத்தேசத்தவர்களுட்பலர் சுயராச்சிய மடைந்தமையாற் பாஷாபிமானம் பெரிது முற்றுத் தொழில் புரிகின்றனர். ஒவ்வொரு சாதியத்தாரும் கிணற்றுத்தவளையே போன்று தத்தம்பாஷையே மிகப்புராதனமான தென்றும் விசேஷமுற்றதென்றும் தனித்தனிவாதிக்கின்றனர். பலபாஷா பண்

டிதர்களே இதனை நிர்ணயஞ்செய்யும் பெற்றிவாய்ந்தவர் இவர்களுள் எங்கள் இலங்கையிலும் இந்தியாவிலுமுள்ள தமிழ்த்தலைவர்களின் தொண்டு புகழப்படத்தக்கதேயாகும் முற்காலத்திலே எங்கள் யாழ்ப்பாணத்திலே ஆரிய திராவிட பாஷா பண்டிதர்கள் பலரிருந்து தமிழ் நூல்களை ஆக்கியும் சைவப்பிரசங்கங்களைச் செய்தும் தமிழ் மொழியைப் பெரிதும் விருத்தி செய்தார்கள் இவர்களுள் சேனதிராஜ முதலியார், ஆறுமுக நாவலர், அவரின் மருமகன் வித்துவசிரோமணி பொன்னையபிள்ளை, அவரிடத்திற் கலைபயின்ற சுவாமிநாத பண்டிதர், எனது தந்தையாரின் தந்தையார் சங்கரபண்டிதர் அவரிடத்திற் கலைபயின்ற கோப்பாய்ச் சபாபதிநாவலர், எந்தையார் சிவப்பிரகாச பண்டிதர், அவரிடத்திற் கலை பயின்ற அம்பலவாணநாவலசுவாமிகள், மேலைப்புலோலிச்சதாவதானம் கதிரவேற்பிள்ளை, புதுக்கோட்டைச் சமஸ்த்தானப் பிரதம நீதிபதியாக இருந்த சி. வை. தாமோதரம் பிள்ளை, சென்னையில் வசித்த திரிகோணமலைக் கனககசுந்தரம்பிள்ளை, நீர்வேலிப்பீதாம்பரப் புலவர், சுன்னைக்குமாரசுவாமிப் புலவா, என்பவர்களே மிகப்பிரசித்தி பெற்றவர்களாகும். இவர்கள் சமஸ்கிருதம் தமிழ் என்னுமிருபாஷைகளிலுமுள்ள இலக்கண இலக்கியதர்க்கநூல்களை ஐயந்திரிபறக்கற்று எங்கள் ஈழமண்டலத்திலும் இந்தியாவிலும் பலராலும் மதிக்கப்பட்டவர்கள். இந்தியாவிலிருந்த திரிசிரபுரம் மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை, குடந்தைத்தியாகராஜச் செட்டியார் பண்டிதமணி கதிரேசச் செட்டியார் போன்ற பெரும் புலவர்களேயல்லாது மற்றைய சில குட்டிப்புலவர்களும். டண்மைககல்வியறிவுற்றிருந்தும்

நூலுரை போதகாசிரியர் மூவரு
முக்குணவசத்தால் முறைமறைந்தறைவரே
அவத்தை வசத்தால் அலைகுவர் திடனே
அதி மதிநுட்பமோ அதிகலை கற்பினும்
விதியது வசத்தால் விதிவிலக் கயாப்பார்

எனத்திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த ஈசான மடாதிபதியாக இருந்த ஈசானதேசிகர் என்னுஞ் சுவாமிநாததேசிகரவர்களியற்றிய இலக்கணக்கொத்திற் கூறியாங்கே மனச்சாட்சிக்கு மாறுகப்புகலும் வேதாகமப் புரட்டர்களும் இந்த யாழ்ப்பாணப் புலவர்களின் பெயர்களைக் கேட்டவுடனேயே நடுங்கிஞர்கள். இவர்களேயல்லாமல் நவாலிச் சோமசுந்தரப்புலவர், பாதர் ஞானப்பிரகாசர், இராசநாயக முதலியார், சுவாமி விபுலானந்தர், சுதேசநாட்டியப் பதகிராதிபராய துஷ்ட நிககிரக, வேலுப்பிள்ளை என்பவர்களும் பாஷாபிவிருத்தியின் பொருட்டரும் பாடுபட்டுள்ளார்கள்.

இவர்களின் போதனைகளினுலே மாழ்ப்பாணத்தவர்களிற் பெரும்பகுதியினர் கல்வியறிவுற்றவர்களாகவும் சைவாசாரப் பழங்களாகவும் விளங்கிஞர்கள் கிராமங்கள் தோறும் ஆலயங்களை அமைத்து அறிவும் ஒழுக்கமுமுள்ள குருக்கள்மாரைக்கொண்டு நித்தியநைமித்தியங்களை நடததுவித்தார்கள். மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான் பிறப்பொழுக்கங்குன்றக்கெடும் என்றுர் திருவள்ளுவர். பதிதன் என்னுஞ்சொல் சாதிசயய ஒழுக்கங்களிற்தவறினவன் என்னும் பொருளை உடையது. “பதிதஸ்ய நதாஹ” என்பது அகநிர்ணயச் சுலோகப்பகுதி. இதன் பொருள், ஒருவன் பதிதனுய் விட்டாணுகில் அவனுடைய ஞாதியர்கள் அவனை இறந்தவனுகப் பாவித்துத்தர்ப்பை சுட்டு ஸ்நானஞ் செய்து அவனைக்கழித்துப் போட்டார்களேயாயின் அதன் பின்னர் அவனுல்வரும் ஆசௌசங்கள்யாவும் ஞாதியர்களுக்கு இல்லை என்பதாகும். இது தமிழ் நாட்டுமரபாகும். இவ்விதமான சம்பவங்கள் சிலஎங்கள் யாழ்ப்பாணத்தில் நடந்ததை யான்நேரே கண்டுள்ளேன்.

இஃதிவ்வாற்றுனே இருக்கத்தற்காலத்திலெங்களின் சைவசமயாபிமானம் விரைந்தெழுத்து ஓடித்தேசாபிமானத்துடனிரண்டறக்கலந்து அதன் மயமாகிச்சைவச

மயாசாரப் பழக்க வழக்கங்களையெல்லாங்கெடுத்தற்கு ஆரம்பித்துவிட்டது. இது இங்ஙனேயாகத் தெய்வ வழிபாடு குறைந்து தெய்வ நிந்தனையும் மறைகள் நிந்தனையும் ஆரம்பித்துவிட்டன, இளைஞர்களெல்லோரும் அரசியலிற் கவனஞ் செலுத்துகின்றார்களன்றிக் கல்வியிற் சற்றேனுங் கவனங்கொள்கின்றார்களில்லை, அந்தணர்கள் முன்போன்று தங்கட்குரிய ஆறுவகைத் தொழில்களையுஞ் செய்கின்றார்களில்லை, அவர்களை முன்னரே போன்று ஆதரித்து ஊக்கப்படுத்துபவர்களும் அருகிவிட்டார்கள். இதனால் அவர்களும் இந்தியாவிலுள்ள பிராமணர்களில் ஒருசாரார் போன்று அரசினருத்தியோகங்களை நாடுகின்றார்கள், ஐயையோ, அவர்கள்தான் என்ன செய்வார்கள், தமிழ்ப்பாஷையிலாவது வேறு எந்தப்பாஷைகளிலாவது பிரதானமாகக் கற்க வேண்டியது இலக்கணமேயாகும். இலக்கணங் கற்காவிடில் பிழையறப் பேசவாவது எழுதவாவது முடியாதென்பது பலருமறிந்ததொன்றாகும். முற்காலத்திருந்த ஆசிரியர்கள் நிகண்டு நன்னூல் தொல்காப்பியம் பாரதம் இராமாயணம் திருவள்ளுவர் திருக்கோவையார் புறநானூறு முதலனவாய இலக்கண இலக்கிய நூல்களைக் கற்பித்தார்கள், கற்பவர்களும் மாணக்கமுறையானே இருந்து கற்றார்கள் இனி இடைக்காலத்தில அரசினரின் உதவிபெற்ற பாடசாலைகளில் ஆறும்வகுப்பு மாணவர்களுக்கு நன்னூலில் எழுத்தியல் பதவியல்களும் ஏழாம் வகுப்புக்கு பெயர்வினை பொது இடை உரியியல்களும் எட்டாம் வகுப்புக்கு உயிரீற்று மெய்யீற்று உருபுபுணரியல்களும் கட்டாயமாகவே படிக்க வேண்டியனவாக இருந்தன, அக்காலத்தில் அரசினரின் தராதரப்பத்திரம் பெறாதவர்களாக இருப்பினும் முறையானே கலைபயின்று அறிவுமுதிர்ந்த ஆசிரியர்களும், அவ்வாற்றானே நிரம்பிய கல்வியுடன் தராதரப் பத்திரம்பெற்ற ஆசிரியர்களும் செவ்விதே கற்பித்தார்கள். வித்தியாபரீக்ஷகர்கள் ஆங்கிலப் பட்டதாரிகளாக இருந்தமையால் அவர்களிற் சிலா இலக்ண இலக்கியங்களை நன்கறியாதிருந்தார்களெனினும் தெரிந்தவர்கள்போன்று வெகு சாதுரியமாகக் கருமமாற்றினார்கள். சிலபாடசாலைகளில் எட்டாம் வகுப்பிற் படித்த பிள்ளைகள் கந்தபுராணம் முழுவதிற்குமே பயன்சொன்ன பெருமையையும் பெற்றிருந்தார்கள். தற்காலமோவெனின் இலக்கணம் என்ற பாடம் அரசினர் பாட அட்டவணையி

விருந்தும் மறைந்தோடிவிட்டது. அது எங்ஙனே ஓடியது எங்குப்போய்த்தங்கியிருக்கின்றது என்பது பரமரகசியமே. ஆசிரியர்களுட் சிலர் பாஷை என்னும் பாடத்தினுள்ளே இலக்கணமமைகின்றதே எனக்கூறுகின்றார்கள். ஐயையோ, மதுரைத் தமிழ்ச்சங்கத்திற் பெரும் புலவர் திலகமாக இருந்துகொண்டு தருமி என்னுமந்தணச் சிறுவன் கொண்டுவந்த சோமசுந்தரக்கடவுளின்

கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறி யெயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீயறியும் பூவே

என்னும் செய்யுளிற்கும் பிழை கூறிய நக்கீரதேவருக்கும் தமிழிலக்கணஞ் செவ்விதே தெரியாதென்று அகத்திய முனிவர் கற்பித்தாரென்றால் அந்த இலக்கணத்தினைப்பாஷை என்னும் பாடத்தினுளடக்கித் தற்காலத்திலாசிரியர்கள் படிப்பிப்பதெங்ஙனே என்பதனையும், இந்த ஆசிரியர்களுள் நூற்றிற்கு எத்துணைவிகிதமானோர் இலக்கண இலக்கியங்கற்பிக்குமாற்றல் பெற்றுள்ளனரென்பதனையும் ஆராய்ந்து ஆவனசெய்தல் தமிழ்ப் பாஷையை விருத்தி செய்யக்கருதும் பெரியோர்களின் கடமையேயாகும்.

தற்காலத்தில் விஞ்ஞானம் (சயன்ஸ்) மிருகநூல் (சூலோசி) தாவரநூல் (பொற்றனி) முதலியன ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவைகள் சாலவும் வரவேற்கப்படவேண்டியனவேயாகும். இவைகளில் முன்னரே தமிழ்ப் பாஷையில் வழங்கப்படாத புதுப்புதுச் சொற்கள் சில மொழிபெயர்பாக எழுதப்பட்டுள்ளன. இச்சொற்களுக்குப் பக்கத்திலே அவ்வவற்றிற்குரிய ஆங்கிலச் சொற்கள் குறிப்பிட்டிருத்தல் வேண்டும். இங்ஙனே சிலர் குறிப்பிட்டுள்ளனர். சிலர் குறிப்பிடாமையாற் கற்போர் பலருங் கற்பிப்போர் சிலரும இடர்படுகின்றார்கள்.

தற்பொழுது சைவசமயமும் தமிழ்ப்பாஷையும் எத்துணைச்சீர்கேடு அடைந்துள்ளன என்பதனை இதுவரையில்யான் குறிப்பாகவே எடுத்து விளக்கியுள்ளேன். ஆறுமுகநாவலர் போன்ற உண்மைச்சைவாபிமானிகள்

தற்காலத்திருப்பார்களேயாயின் காவி யுடுத்துக்கொண்டுகூடச் சமயத்திற்கேற்றமாதிரிப்பேசி வயிறுவளர்க்கும் வேதாகமப்புரட்சர்களாகிய வேடதாரிகள் இங்குவந்து தலை காட்டுவார்களா, இனித்தற்பொழுதுள்ளவர்களிற் பலர் சிறிய சிறிய இலகுவான சொற்களினாலேயே நூல்களியற்றுகின்றார்கள். பொதுமக்கள் விரும்புவதும் அஃதேயாகும், நான் அங்ஙனே செய்யாது இச் சிறுநூலினும் இதற்குமுன்னரே வெளியிட்ட அருணகிரி நாதருங் கதிர்காமமும் என்னும் நூலினும் சேனாவரயர் நச்சினார்க்கினியர் போன்ற பேராசிரியர்களின் வசன நடையைத்தழுவி முற்காலங்களில் வழங்கிய அரும்பதங்களைச் சிறுகப் பெய்து இயற்றியுள்ளேன் இஃதெக்காரணம் பற்றியோ வெனின், மிகப்புராதன காலத்தனவாயசங்க நூல்களிலேயுள்ள அருஞ்சொற்கள் பல இக்காலத்தில் வளங்கிவராமையாலும் இன்னுஞ் சில்லாண்டு களிலவை அழிந்தொழிந்து போகுமே என அஞ்சியமையாலுமேயாம். இதற்கு தாரணமாக நக்கீர தேவராலியற்றப்பட்ட திருமுருகாற்றுப்படை யென்னும் நூலில் திருவேரகம் என்னுஞ் சுவாமி மலைக்குரிய செய்யுளில் '' புலராக்காளகம் புலர உடீஇ உச்சிக்கூப்பிய கையினர் '' என்றவரியில் உடுக்கின்ற வஸ்திரம் என்றுங் கருத்தினையுடைய காளகம் என்னுஞ் சொல் இக்காலத்தில் அநேகருக்குத் தெரியாத தொன்றேயாகும், இன்னும் இதுபோன்றன பல வுள, இந்நூல் சைவசமய சம்பந்தமான தாதலால் எங்கள் பாடசாலைகளில் மேல் வகுப்புக்குரிய சமயபாடமாகக் கற்பிக்கப்படல்வேண்டும் இதன் பொருட்டாக இதனிறுதியில் அரும்பதவிளக்கமும் எழுதி வெளியிட்டுள்ளேன். இதனைக்கற்பவர்களும் கற்பிப்பவர்களும், அச்சுவாகன மேற்றிவெளிவரச் செய்தற்காதார புருஷர்களாக இருந்து பொருளுபகரித்தவர்களும் அழகுற அச்சிட்டளித்த அச்சகத்தார்களும், அரியானை என்னுந் தேவாரத் திப்பதிகத்திற் கூறிய வண்ணமே பெரும்பற்றப்புலியூரானைப்பற்றிப் பேசுபவர்களும் இஷ்டசித்திகளையெல்லாம் பெறுவார்களாக.

38, கொட்டபோம் தெரு இங்ஙனம்

கொழும்பு-13 சிவ. பண்டிதநடராஜா

23-12-60

சினிமாக்களிலும்

நாடகங்களிலும் படிக்கின்ற

மாதிரிப்பதம் முதன்முதலியற்றியருளிய

# முத்துத்தாண்டவர்

## நடராஜத்தாண்டவத் துதி

அநந்த நவ ரத்னவில சத்கடக கிங்கிணீஜ்ஜலர்
ஜலஜலம் ஜலவரம்
முகுந்த விதி கஸ்தகத மத்தள லயத்துவனி
திமி திமித நர்த்தனபதம்
சகுந்தரத பர்ஹரத நந்திமுக தந்திமுக
ப்ரிங்கிரிஷி சங்க நிகடம்
சநந்தசன கப்ரமுக வந்தித பதம் || பர
சிதம்பர நடம் ஹ்ருதிபஜ

சுவயம்புலிங்கங்களையும் தேவலிங்கங்களையும் பாணலிங்கங்களையும் உடையனவாய், அநேகநூதன சித்திரவேலைப்பாடுகளுடன் பொலிந்து சிறந்து விளங்குகின்ற பல சிவாலயங்களையும் குகாலயங்களையும் அநேக நதிகளையுந் தன்னகத்துட் கொண்டுள்ளதாயும், முற்றத் துறந்த பெரும் ஞானிகளையும் சாதுக்களையும் சமயபோதகர்களையுந் தோற்றுவித்ததனாலும், புண்ணியபூமி எனப் பலராலும் புகழ்ந்து கூறப்படும் இந்தியாவிலே, ஓர் காலத்தில் அகத்தியமுனிவர் குடகமலையின்மேலே வைத்துக்கொண்டிருந்த கெண்டியிலே உள்ள தண்ணீரை விநாயகக்கடவுளானவர் தேவேந்திரனின் வேண்டு

கோளின்படியே காகவடிவமுடையவராகச் சென்று அந்தக்கெண்டியின் மேலிருந்து சரித்து வீழ்த்தியமையினலே அதிலிருந்து உற்பத்தியாகிப்பாய்கின்ற காவேரி ஆற்றின் நீர்வளமுடையதாகிய சோழமண்டலத்திற் தஞ்சாவூர்ப்பெரும் பிரிவில், சைவாசார சீலர்களாய் வருணாச்சிரம ஒழுக்கங்களிற் சற்றேனும் பிறழாத சற்சனர்கள் வசிக்கின்ற சீர்காழி என்னும் நகரம் ஒன்று சரித்திரப்பிரசித்தி பெற்றதாய் நிலை பெற்று விளங்குகின்றது. இதற்குப் பிரமபுரம், வேணுபுரம், பெரும்புகலி, வெங்குரு, திருத்தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பைநகர், கொச்சைவயம், சீர்காழி, கழுமலம் என்னும் பன்னிரண்டு திருப்பெயர்கள் உள்ளன இந்நகரம் தஞ்சாவூர் மாயவரம் மார்க்கமாகச் சென்னபட்டணத்திற்குச் செல்லும் புகைரதவீதியில் இருநூற்றறுபதாவது மைலிலும், சென்னபட்டணத்திலிருந்து தெற்கே நூற்றறுபத்திரண்டாவது மைலிலும், சிதம்பரத்திலிருந்து தெற்கே பத்தாவது மைலிலும், திருச்சிராப்பளி ஆகாயவிமான நிலையத்திலிருந்து மாயவரம் வழியாகச் சென்ன பட்டணத்திற்குச் செல்லும் வீதியில் எண்பத்தெட்டாவது மைலிலுமிருக்கின்றது இந்த நகரத்திலே ஓர் மிகப்பிரபலியமான சிவாலயமிருக்கின்றது.

இந்தச் சிவாலயமானது திருச்சிராப்பளிக்கும் சிதம்பரத்திற்கும் இடையிலே உள்ள மாயவரத்திற்குக் கிழக்கே நான்கு மைல் தொலைவிலிருக்கும் தருமபுர மடாதிபதியவர்களின் நிர்வாகத்திற்குட்பட்டதாக இருக்கின்றது. இந்த ஆதீனமானது பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூரிற் கார்காத்த வேளாளகுலதிலகரா

ய்ச் சிவநேயச்செல்வராக இருந்த சுப்பிரமணிய பிள்ளை அவர்களுக்கும் மீனாக்ஷி அம்மையாருக்கும் புத்திரராக உதித்தவரும் மதுரைச் சோமசுந்தரப் பெருமானைப் போற்றி வழிபாடு செய்து அப்பெருமானின் திருவுள்ளத்தின்படியே திருவாரூரிலே இருந்த ஸ்ரீ லஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகரவர்களிடத்தில் தீக்ஷையும் ஞானோபதேசமும் பெற்றவருமாகிய ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகளவர்களினால், யமதர்மராஜனாலும் அகஸ்திய மகாமுனிவரினாலும் பிரதிஷ்டைசெய்து பூசிக்கப்பெற்ற தர்மபுரீஸ்வரர் ஆலயத்தின் பாங்கரிலேயே ஸ்தாபிக்கப்பட்டது. இந்தக்குருமூர்த்திகளைக் கண்ணுற்ற அகஸ்திய முனிவரின் சிஷ்யர்கள் தருமபுரீஸ்வரர் ஆலயத்தையும் இவரிடமே ஒப்புவித்துவிட்டனர். இவ்வாற்றானே இவர் திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட தேவர் வழிச்சந்தானாசாரியராகி ஆலய பரிபாலனஞ் செய்து கொண்டும் தம்மைவந்தடைந்தோரின் பக்குவநிலையினையறிந்து அன்னோர்க்கு ஞானோபதேசஞ்செய்து கொண்டும் அருளாட்சி நடாத்தினர். இக்குருமூர்த்திகளின் பின்னரே சிஷ்ய முறையானே ஆசாரியர்கள் ஆதீன கர்த்தர்களாக இருந்து பற்பல அற்புதச் செயல்களையுஞ் செய்து சைவசமய பரிபாலனஞ் செய்துள்ளனர்.

இனி்து இங்ஙனேயாகத் தெய்வவிசுவாசம் அருகி அஞ்ஞான இருள்பரவியிருக்கின்ற இக்காலத்திலே சாட்சாத் பரமபதியே சடாமகுடத்திலேயுள்ள கங்காநதியையும் பாலசந்திரனையும் நெற்றிக்கண்ணினையும் மறைத்து மானுடயாக்கை யுடையவராய் வந்தருளினரென ஆன்றோரால் சிற்சிலசமயங்களிற் கருதப்படும் பெருந் தகைமையை உடையவரும், சிவகாமசுந்தரீ சமேத

ஸ்ரீ நடராஜப் பெருமானரைத் திருத்தில்லையினிற் பலநாட் பராவிய பெருந்தவத்தினருமாகிய ஸ்ரீ லஸ்ரீ சுப்பிரமணிய ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்களே தற்பொழுது இந்தத்தருமபுர ஆதீன கர்த்தராக இருந்து ஞானச்செங்கோலாட்சி நடாத்துகின்றனர். இவர் வேத வேதாந்த தத்துவவிசார வைதிகசைவாசார சீலசிரேஷ்ட சமரசநிலையின் இலக்கியப் பேற்றினராயும், தேவார திருவாசகாதிகளை இசைமுறை பிறழாதோதும் சங்கீத விற்பன்னரத்தினமாயும், அருள் வேண்டினோர்க்கும் பொருள்வேண்டினோர்க்கும் அருளும் பொருளும் வேண்டினோர்க்கும் அவ்வவர் வேண்டியாங்கே ஈந்தருளும் பெருவள்ளலாயும், ஆரிய திராவிட கலாசாலைகளையும் வேதாகம கலாசாலைகளையும் நிறுவியும் தேவார திருவாசக சைவசித்தாந்த நூல்களை அச்சுவாகன மேற்றியும் இன்னோரன்ன பற்பலவற்றினாலும் சைவபரிபாலனஞ் செய்பவராய்க் கிரியிற்றீபம் போல ஞானஒளிவீசி விளங்குகின்றனர்.

இந்தநகரத்திலே ஏறக்குறைய இருநூற்றைம்பது வருடங்களின் முன்னரே பரம்பரையாகவே மேளவாத்தியத் தொழில்செய்யும் பிரிவினருள் இளமைப்பராயத்திலேயே தந்தையாரையும் தாயாரையு மிழந்த தாண்டவன் என்னும் பெயரினையுடைய சிறுவனொருவனிருந்தான். இந்த இளைஞனே எங்கள் பக்தமுத்துத்தாண்டவராகும், அநாதையாக இருந்த இவரை வறுமைப் பிணியேயல்லாமல் திரேகப்பிணியும், இவரின் பிறவிப் பிணியை நீக்குவான் விரும்பிப்போலும் மிகு சீக்கிரமாகவே வந்து பற்றிவிட்டது. இதனால் இவர் தனது பரம் பரைத் தொழிலைச் செய்யப் பழகவுமில்லை, அவ்வாறே

பயில எண்ணமுமில்லை. இவர் தனது சுற்றத்தவர்களி னில்லங்களிற் சென்று உணவருந்திக்கொண்டு பிரதிதின மும் தோணியப்பராலயத்திற்குச் சென்று தனது இன்னல் களை நினைந்து நினைந்து குறை இரந்துவணங்கி வருவாரா யினர். தற்காலத் திளைஞர்களுட் சிலர் சினிமாப்படக் காட்சிகளிலே படிக்கப்படுகின்ற சிற்றின்பப்பாடல்களை யே மனனம் பண்ணிக்கொண்டு சதா முணுமுணுத்துக் கொண்டு திரிகின்ற தன்மையையே போன்று இவரும் கல்வி கல்லாதவராயினும் அந்த ஆலயத்திற்கு வரு கின்ற மெய்யடியார்கள் பாடித்துதிக்கின்ற பேரின்பப் பாடல்களாகிய தேவார திருவாசகப்பாடல்களைக் கேட்டு மனம் லயப்பட்டு அவற்றை மனனம் பண்ணிக் கொண்டு வாய்க்குள் முணுமுணுத்துக்கொண்டே திரிவா ராயினர். இவர் தனது சுற்றத்தவர்களாகிய மேளகாரர் களின் வாத்தியங்களைக்கேட்டு மகிழ்ந்து தானும் அவர் களைப் போன்றே இடையிடையே தலையை அசைப்பார் உருத்திர கணிகையர் மரபிலே உதித்த சிவபாக்கியம் என்னும் பெயரினையுடைய மங்கை நல்லாளொருத்தி இந்தக்கோவிலுக்கு நாடோறும் வந்து இறைவன் முன் நிலையிலே பரதநாட்டிய முறை சிறிதும் வழுவாது ஆடிப் பாடி வணங்கிவந்தனள். இதனைக் கண்ணுற்ற இந்தத் தாண்டவருங்கிரமமாகவே இவ்வாடலைக்கண்டும் பாடலைக் கேட்டும் இவற்றுற்சொக்கி மனம் நெக்குநெக்குருகிப் பரவசமடைந்து நின்றனர். இந்தச் சிவசம்பந்தமாய அன்பின் காரணமாகவே இவர் இடையிடையே இந்தச் சிவபாக்கியம்மாள் வீட்டிற்குச் சென்று ஆங்குத் தங்கிநின்று பாடல் கேட்பாராயினர். இதனைக்கண் ணுற்ற அவ்வூராருட்சிலர் இவரைநையாண்டி செய்து

பழித்துரைத்தார்கள். ''ஊருக்கெழியவன் பிள்ளையார் கோவில் ஆண்டி'' என்னும் பழமொழிக்கிலக்காகவே அநாதையாகிய இவருக்காகப் பரிந்து பேசுவார் தானும் அக்காலத்திருந்திலர் போலும் ''தட்டிப்பேசுவார் இல்லாவிட்டால் தம்பி சண்டப்பிரசண்டம்'' என்னும் முதுமொழிப்படியே இவரின்மேற்குறை கூறுபவர்கள் பெருகிவிட்டார்கள். இக்காரணத்தினாலேயே இவரின் சுற்றத்தவர்களும் இவரை வெறுத்தனர். அதனாலிவரும் சுற்றத்தவர்களினில்லங்கட்குச் சென்று போசன மருந்தும் வழமையையும் படிப்படியாகவே நிறுத்திவிட்டனர். போசனங் கிடைத்த நேரங்களிலேயே உணவருந்தினர். அங்ஙனேகிடைக்காத நேரங்களில் ''சிவ, சிவ'' என்றே பலமுறை கூறிக்கொண்டிருந்தவர், இங்ஙனமாகவே ஒரு நாளிரவு பசிக்களையுடனே ஆலயத்தின் உட்பிரகாரத்திலே உள்ள ஓர் மண்டபத்திற் படுத்துறங்கிவிட்டனர். இதனை அறியாத கோயிற்குருக்களும் பணிவிடைகாரர்களும் அர்த்தசாமப்பூசை முடிந்தவுடனே கபாடபந்தனஞ் செய்து கொண்டு தத்தம் இல்லங்கட்குச் சென்றுவிட்டார்கள்.

இஃதிங்ஙனமாகவே, இதற்குச் சில்லாண்டுகளின் முன்னரே இவ்வாலயத்தின் முன்பாகவே உள்ள திருக்குளத்தின் கரையிலே நின்று கொண்டு கோயிற் கோபுரத்தைப்பார்த்து ''அம்மே அப்பா'' என்று அழுதவரும் அவ்வூரிலே இருந்த வைதிகப் பிராமணர்பரம்பரையில் கௌணியர் கோத்திரத்திலுதித்த சிவபாத விருதையரதும் பகவதி அம்மையாரதும் சுதனும், மூவாண்டுப்பிராயத்திலேயே ''தோடுடைய செவியன்'' என

ஆரம்பித்து அமிழ்தினு மினியனவாய் வேதாகம சுத்தா
த்து வித சைவ சித்தாந்த நூல்களின் சாரங்களை உள்ள
டக்கியனவாய் மிளிர்கின்ற தேவாரத்திருப்பதிகங்களைப்
பாடியருளிய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனருக்கு
ஞானப்பாலூட்டியருளிய உலகமாதாவாகிய உமாபிராட்
டியாரும் அருள் வள்ளலாகிய சிவபெருமானும் இந்தத்
தாண்டவருடைய பசிநோயைத் தீர்த்து ஆட்கொள்ளத்
திருவுள்ளங் கொண்டார்கள். ஆகவே உமாபிராட்டியார்
ஓர் மானுடவடிவங்கொண்டு சென்று உறங்கிக்கொண்
டிருந்த தாண்டவரை எழுப்பி ஞானப்பாலடிசிலைக்
கொடுத்தருளித் திருநோக்குத் தீக்ஷையுஞ் செய்தருளி
" நீ தில்லைக்குப்போ. ஆங்கே நடராஜப் பெருமானர்
உனக்குச் சர்வாபீஷ்ட சித்திகளையுங் கொடுத்தருள
வார் " எனக்கட்டளை இட்டலாகிய வாக்குத்தீக்ஷையுஞ்
செய்து மறைந்தருளினர்.

பூர்வ ஜென்ம புண்ணிய வசத்தினலே இப்பெரும்
பேறுபெற்ற தாண்டவர் சிவசந்நிதானத்திலே ஆழ்ந்த
தியானத்தில் அமர்ந்திருந்தனர். வழமை போன்று பிரா
தக்காலத்தில் ஆலயக்கதவைத் திறந்துகொண்டு உள்
ளேபுகுந்த குருக்கள் தாண்டவரைக்கண்டு சாலவும்
இறும்பூதெய்தி அந்தத்தாண்டவர் மூலமாகவே நடந்த
சம்பவங்களை யெல்லாமறிந்து அவருக்குப்பொருளுதவி
செய்து விபூதிப்பிரசாதமும் நல்கி முத்துத்தாண்டவர்
என்னும் நாமகரணமுஞ் செய்து சிதம்பரத்திற்குப்
போக வழியனுப்பினர். இவ்வாற்றனே ஆங்குநின்றும்
புறப்பட்டுத் தில்லைத்திருநகரை அடைந்த முத்துத்
தாண்டவர், முன்னேர் காலத்திலே கௌடதேசத்தரச

ஞகிய இரணியவர்மன் வடஇந்தியாவிலே உள்ள அந்தர்வேதி யென்னும் இடத்திலிருந்து பலவரிசைகளோடும், ஆகவநீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி என்னும் மூவகைச் சிவாக்கினி சகிதமாக ரதத்திலேற்றி அழைத்துவந்த ஓரையில் தில்லை மூவாயிரவர்கள் என்னும் எண்ணிக்கையில் ஒன்று குறைந்தமையால் மனம் வருந்திய அரசனும் வியாக்கிரபாத முனிவரும், பிறருங் கேட்ப "நாமும் அவர்களில் ஒருவர்" என அந்தக் கூத்தப்பிரானாலேயே அசரீரியாகக்கூறப்பட்ட பெருமையையும், திருநாவுக்கரசு நாயனாரவர்களால்,

பொருவினை ஒன்றுடைப் புண்ணிய
மூர்த்தி புலியதளன்
உருவுடை அம்மலை மங்கை
மணாளன் உலகுக்கெல்லாந்
திருவுடை அந்தணர் வாழ்கின்ற
தில்லைச்சிற் றம்பலவன்
திருவடி யைக்கண்ட கண்கொண்டு
மற்றினிக் காண்பதென்னே. என்னுந்தேவா

ரச்செய்யுளில் "உலகுக்கெல்லாந் திருவுடை அந்தணர்" என்றும், திருஞானசம்பந்த மூர்த்திநாயனாரவர்களால்.

இராகம், யதுகுலகாம்போதி, தாளம், திரிபுடை.

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்றா வெண்டிங்கண் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே.

து நின்று தாண்டவமாடத்தொடங்கி விட்டாள். உடனேயே அவர் பலப்பிரியா இராகத்தில் மிச்ரசாதி ஐம்பைதாளத்தில்.

பல்லவி

பூலோக கயிலாசகிரி சிதம்பரம் அல்லால்
புவனத்தில் வேறும் உண்டோ பூலோக

அனுபல்லவி

சாலோக சாமீப சாரூப சாயுச்ய
சபைவாணர் ஆநந்தத் தாண்டவம் புரிவதால்
பூலோக

சரணம்

நாலுமுக மேருவெனும் நாலுகோ புரநிலையும்
நவரத்ன மணிகளால் ஒளிர்சித்ர மதில்களும்
மேலுலகை அளந்திடல்போல் உயர்ந்து வெயில்
விரித்த கம் பத் திரள்களும்
காலுலவும் ஆயிரக்கால் மணிதரள மண்டபமும்
கங்கையின் நிறைந்த சிவ கங்கையின் விலாசமும்
ஆலிலையில் மாலும் அய னுலுமறி யாதபேர்
அம்பலமும் மேவுவோர்க் அற்புதம் புரிதலால்
பூலோக

வேதமுதல் எனும்மூல நாதர்தா பியுமேரு
வில்லியார் சிவகாம வல்லியார் கோயிலும்
மாதவர்கள் விண்ணவர் தீதகன் றிடவந்து
வாழ் வுறும் மாளிகை களும்
ஏதம் ஒரு சற்றும் அணுகாத கட்டளைகளும்
இரவிபோல் இலங்கிடும் இந்திர விமானங்களும்
காதலுற் றேகண்ட பூதலத் தோரெலாம்
காணநூா ருயிரங் கண்வேண்டும் என்கையால்
பூலோக

மேவாருந் தொழுந்தில்லை மூவாயிரம் புனிதர்
வீதியுஞ் சைவர் திருவீதியின் மடங்களும்
தாவாப் பசிதவிர வாவா எனுஞ்சத்ர
சாலை யும்பல சோலையும் நறும்
பூவாவியும் வயலும் ஓவாமலே பெருகு
பொன்னி நதி யுந்தெருவும் மன்னிய வளங்கண்டு
தேவர் முதல்மூவர் பாவாணர் அனைவரும்
சிவத்தலத் திற்திலகர் தில்லைவன மென்கையால்
பூலோக

என்னும் பாவினைப் பாடித்துதித்தனர். இவர் அந் நாட்டொடங்கிப் பிரதி தினமும் அந்த ஆநந்தத்தாண்டவராகிய நடராஜப்பெருமானைப் புகழ்ந்து பாடிப் பாடிப் பரவிக்கொண்டு அந்தச் சிதம்பரத்திலேயே இருந்தனர். இவ்வாற்றானே சின்னாட்கள் செல்ல இவர் மாணிக்கவாசக சுவாமிகளும், திருநந்தனாரும் அந்தப் பரம்பரனுடன் இரண்டறக்கலந்த தன்மையேபோன்று தானும் சாரூபபதவியை அடைதல் வேண்டுமென்னும் பேரவாவுடையராய் ஒரு தினம் இறைவன் சந்நிதியிலே நின்று கோகிலப்பிரியா இராகத்தில் ரூபகதாளத்தில்

## பல்லவி

மாணிக்க வாசகர் பேறெனக்குத்தர
வல்லாயோ அறியேன் மாணிக்க

## அனுபல்லவி

காணிக்கை யாகக் கொடுத்தேன் உனக்கென்னை
ஆணிப்பொன் னேதில்லை அம்பல வாணா மாணிக்க

என்றுஞ் செய்யுளைப்பாடிக் குறை இரந்து வணங்கினார். இஃதே இவருடைய இறுதிச்செய்யுள். அச்சமயத்தில் பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்னும் பஞ்ச பூதசம்பந்தமாகிய இவருடைய யாக்கையானது மின்னென மறைந்துவிட்டது ஆன்மா பாலுடனே கலந்த நீரினைப்போன்று சிவபிரானாரின் பாதாரவிந்தங்களிற் கலந்து விட்டது, ஆங்கு நின்றோர் யாவரும் இறும்பூதெய்தினார்கள். இவர் திருவாய் மலர்ந்தருளிய செய்யுட்கள் எறக்குறைய நூறு என ஆன்றோர் கூறுகின்றனர்.

முற்காலத்திலே எங்கள் பாரதகண்டத்திலே நிகழ்ந்த விசேஷித்த செயல்களிற் சிலவற்றை அவ்வக்காலங்களிலே இருந்த அரசர்கள் பெரும் பொருங்கற்களிலும் செப்புத் தகடுகளிலும் செதுக்கி எழுதிவைத்தார்கள். ஸ்தலபுராணங்களைப்பாடிய புலவர்களோவெனில் ஏடுகளில் எழுதிவைத்தார்கள். இவைகளையெல்லாம் பிற்காலத்தில் சைவசமயாபிமானிகளிற் சிலரும சரித்திராராய்ச்சியாளர்களுட் சிலரும் அச்சுவாகனமேற்றி வெளியிட்டுள்ளனர். இந்த முத்துத்தாண்டவரோவெனின் தாம்பாடிப்பாடித் துதித்தனரே அல்லாது பிற்காலத்தவராகிய நம்மனோர்க்குபயோகமாகும் பொருட்டாக எழுதிவைக்காதே பரபதமடைந்து விட்டனர். எனினும் அவ்வச் சமயங்களில் அப்பாடல்களைக் கேட்ட மெய்யடியார்கள் மூலமாகவே அவரின் பாடல்கள் உலகவழக்கில் வந்து எழுத்துமூலமாகப் பிரசித்தி அடைந்து விட்டன இவற்றுட் சிலவற்றைச் செந்தமிழ்ப்பாஷாபிமானச் சிவநேயச் செல்வர்களுட்சிலர் அச்சிட்டுவெளியிட்டுள்ளனர். இவற்றின் சொற்பொருட்டாளவமைப்பின் நயத்தை நன்குணர்ந்த பிரபல நாதசுரவித்து

வான்கள் இச்செய்யுட்களுட் சிலவற்றிற்குச் சுரம் வகுத்துத் தத்தம் குழல் மூலமாக வாசித்து உலகத்தினை ஆனந்த சாகரத்தில் அமிழ்த்துகின்றனர். சங்கீத வித்வான்களும் சினிமா நடிகர்களும் நடிகைகளும் இவற்றினுட் சில செய்யுட்களைப்பாடி அதற்கேற்ப ஆட்டங்களும் புரிந்து தாங்களும் மகிழ்ந்து பொது ஜனங்களையும் மகிழ்விக்கின்றனர். இவற்றிற்கெல்லாம் எடுத்துக் காட்டாக இந்தப்பக்த முத்துத்தாண்டவரின் பாடல்களிற் சிலவற்றை ஈண்டுக் குறிப்பிடுகின்றனன்.

(1) இராகம் — மோகனம்     தாளம் — ஏகதாளம்

பல்லவி

அருமருந் தொருதனி மருந்திது
அம்பலத்தே கண்டேனே. (அருமருந்)

அநுபல்லவி

திருமருந்துடன் வருமருந்து
தில்லை அம்பலத் தாடும் மருந்து
இருவினைகள் அறுக்கும் மருந்து
ஏழை அடியார்க் கிரங்கும் மருந்து (அருமருந்)

சரணங்கள்

கொன்றை தும்பை அணிந்த மருந்து
கோதை மீதில் பார்ந்த மருந்து
மன்று ளேநின் றுநிற் மருந்து
மாணிக்க வாசகர் கண்ட மருந்து (அருமருந்)
இந்திர ரானவர் வானவர் போற்றும்
இருடிகள் தங்களுக் கெட்டா மருந்து
சந்திர சூரியர் காணு மருந்து
தானே முளைத்துத் தழைத்த மருந்து (அருமருந்)

அநுபல்லவி

அத்தர் தில்லை வாழும் அம்பலவாணர்
ஆனந்தத் தாண்டவ ராஜர் அல்லாமல் ( சித்தர் )

சரணம்

ஒப்பிடு வித்தைகள் எப்படி உலகத்தில்
உடலே செப்பாக உயிரே பந்தாக
செப்பிடு வித்தைகள் விளையாடினபின்
செப்புவதில்லை சென்றறி வீரென் றெளிக்கும் (சித்தர்)

இதஞ் சொலிக் கின்னரர் கிம்புருடர்பாட
இந்தனில் அம்பிகை கண்களி கூரப்
பதஞ்சலி வெய்புலி அஞ்சலி நாடப்
பதஞ்சலி யாமலே நிதமும் நின்றநடம் ( சித்தர் )

மாலொடு பிரமனும் தேடரி தான
மலர்ப்பதங் கண்டு வணங்கித் துதித்திட
சாலோக சாமீப சாரூப சாயுச்யம்
தந்தருள் தாண்டவ ராஜர் அல்லாமல் ( சித்தர் )

இராகம் தாளம்
மாயாமாளவகௌளை ஆதி

பல்லவி

ஆடிக் கொண்டார்அந்த வேடிக்கை காணக்கண்
ஆயிரம் வேண்டாமோ

அநுபல்லவி

நாடித் துதிப்பவர் பங்கில உறைபவர்
நம்பர் திருச்செம்பொன் அம்பல வாணர்
( ஆடிக்கொண்டார் )

சரணம்

மங்கயப் பாதச் சிலம்பசைந் தாட
பாதச் சதங்கைகள் கிங்கிணென் றாட
பொங்கும் உடனே உரித்துத் தரித்த
புலித் தோல் அசைந்தசைந் தாட

செங்கையி லேந்திய மான்மழு ஆட
செம்பொற் குழையொடு முயலகன் ஆட
கங்கை இளம்பிறைச் செஞ்சடை ஆட
கனக சபை தனிலே ( ஆடிக்கொண்டார் )

ஆர நவமணி மாலைகள் ஆட
ஆடும் அரவம் படர்விரித் தாட
சீரணி கொன்றை மலர்த்தொடை ஆட
சிவ சிதம் பரத்தோர் ஆட
பேரணி வேதியர் தில்லைமூ வாயிரம்
பேர்களும் பூசித்துக் கொண்டுநின் றாட
காரணி காளி எதிர்த்துநின் றாட
கனக சபை தனி லே ( ஆடிக்கொண்டார் )

நிர்த்தக் கணபதி வேலர்நின் றாட
நின்றயன் மாலுடன் இந்திரன் ஆட
முப்பத்து முக்கோடி தேவுக்கள் உடனே
முனி வரும் நின் றாட
மெய்ப்பத்தி மேவும் பதஞ்சலி ஆட
வியாக்கிர பாதரும் நந்தியும் ஆட
கொப்புற்ற காதாள் சிவகாமி அம்மையும்
கூ டவே நின் றாட ( ஆடிக்கொண்டார் )

5 இராகம் தாளம்
கல்யாணி ஆதி

பல்லவி

ஆடின தெப்படியோ நடனம்
ஆடின தெப்படியோ

அனுபல்லவி

தேடிய மெய்ப்பொ ருளே வளமேவும்
சிதம்பரத் தே ஒரு சேவடி தூக்கிநின் ( ஆடின )

சரணம்

ஒன்றல்ல ரண்டல்ல ஒன்றிரண்டும் அல்ல
நன்றல்லத் தீதல்ல நாதவிந் துவுமல்ல
அன்றல்ல இன்றல்ல ஆதியந் தமுமல்ல
மன்றுள் மரகத வல்லிகொண் டாட (ஆடின)

ஆணல்லப் பெண்ணல்ல அன்றி அலியுமல்ல
காணும் உருவல்லக் காணா அருவு மல்ல
சேணல்ல வேறொரு தேவர்க்குள் ளேதேவ
வாணுதற் பச்சைம டந்தைகொண் டாட (ஆடின)

பூதங்கள் அல்லப் புறம்பல்ல உள்ளல்ல
வேதங்க ளாலே விளங்கா பொருளல்ல
ஆதவன் போலே அசையும் வடிவல்ல
மாதுமை யாள்பச்சை வல்லிகொண் டாட (ஆடின)

சீர்காழித் திருப்பட்டினத்தில் அவதரித்தவராகிய இந்த முத்துத்தாண்டவர் சிதம்பரத்தை அடைந்த பின்னரே வேறெந்த ஸ்தலத்திற்காவது சென்று சுவாமி தரிசனஞ் செய்யாததன் காரணந்தான் என்னையோ என்பதனையும் ஈண்டுச் சுருக்கிக்காட்டுகின்றனன். இந்தச் சிதம்பரம் விராட்புருஷனுக்கு இருதய ஸ்தானமாகும். ராட் என்னும் வடமொழி தேசம் என்னும் பொருளுடையது. வி, என்பது உபசர்க்கமாகும், எனவே உலகத்தை ஒரு புருஷனாக நிர்ணயஞ் செய்துள்ளனர், பொதுவகையானே மானுடர்களாகிய எங்களுடைய நடபாட்டம் முதலாய தொழில்கள்யாவும் இருதயத்தின் இயக்கத்திலிருந்தே நடைபெறுகின்றது இதனையே போன்று உலகபுருஷனுடைய இயக்கமும் இந்த இருதய ஸ்தானமாகிய சிதம்பரத்திலெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ நடராஜப்பெருமானிடத்திலேயே தாம்

கியிருக்கின்றது பிண்டமாகிய சரீரத்தையும் உலகத்தையும் ஒப்பிடுகையில் சரீரத்தில் இடைக்கும் பிங்கலைக்கும் இடையிலே உள்ள சுழுமுனை நாடிபோல இந்தச் சிதம்பரம் உலகத்திற்கு சுழுமுனை நாடித்தலமாக விளங்குகின்றது. இக்காரணத்தினாலேயே சுழுமுனைவழி ஞானசுகோதயம் என்னும் மறு பெயருமுடைத்தாயிற்று. எங்களுடைய ஆன்மாவானது இராக்காலங்களிலே இருதயத்தை அடைந்து ஒடுங்கியிருக்கின்ற தன்மையையே போன்று இப்பூவுலகத்திலே உள்ள சிவாலயங்கள் பலவற்றிலுமெழுந்தருளியிருக்கின்ற மூர்த்திகளின் கலைகள் யாவும இராக்காலங்களில் இங்குவந்தொடுங்கியிருந்து விடியற்காலங்களிற்றத்தம யதாஸ்தானங்களுக்குச் செல்கின்றன இதனாலேயே இங்கு அர்த்தசாமபூசை மிகமிக விசேஷமுடைத்தெனப் பண்டைக்காலந்தொட்டே பலரும் வழிபடுகின்றனர். இவ்வுற்றினுண்மையை வேதாகம உபநிஷத்துக்களிற் பரக்கக்காணக எம்மால் விரைவில் வெளியிடப்படவிருக்கின்ற சிவபெருமான் திருநடனம் என்னும் நூலினும என் சிற்றறிவிற்கெட்டியாங்கே விபரித்துக் காட்டியுள்ளனன்

இஃதேயல்லாது சைவசமயாசாரியர்களுளொருவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் இந்தத்தில்லைக்கூத்தப்பிரானின ஆடலையும், திருவடியையும, அணிந்த துகிலினையும், சிரித்த முகத்தினையும், நெற்றிக்கண்ணினையும் மலைஎடுத்த இராவணனை நெருக்கி மிதித்தவிரலினையும் தரிசித்த கண்களினாலே மீண்டுதரிசிக்க வேண்டியது யாதொன்றுமில்லையே என்னுங்கருத்தினையுடையதாய்,

யாளை யுடைக்கமு கோங்கிப்பன் மாடநெருங்கி யெங்கும்
வாளை யுடைப்புனல் வந்தெறி வாழ்வயற்றில்லை தன்னுள்
ஆளவுடைக்கழற் சிற்றம் பலத்தரனுடல் கண்டால்
பிளையுடைக் கண்களாற் பின்னைப் பேய்த் தொண்டர்
காண்பதென்னே.

என்றற் ருெடக்கத்தனவாய பத்துத்தேவாரச் செய்யுட்களை அருளிச் செய்துள்ளனர், அவரே இந்தத் தில்லையம்பதியில் தான் கண்ட காட்சிகளை அப்படியே படம் பிடித்தாற்போன்று,

1. மங்குன் மதிதவழு மாட வீதி
மயிலாப்பி லுள்ளார் மருக லுள்ளார்
கொங்கிற் கொடுமுடியார் குற்றலத்தார்
குடமூக்கில் உள்ளார்போய்க் கொள்ளம்பூதூர்
தங்கு மிடமறியார் சால நாளார்
தரும புரத்துள்ளார் தக்களூரார்
பொங்குவெண் ணீறணிந்து பூதஞ்சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார்தாமே,

2. காதார் குழையினர் கட்டங் கத்தர்
கயிலாய மாமலையார் காரோணத்தார்
மூதாயர் மூதாதை இல்லார் போலும்
முதலும் இறுதியும் தாமே போலும்
மாதாய மாதர் மகிழ அன்று
வன்மதவேள் தன்னுடலுங் காய்ந்தார் இந்நாள்
போதார் சடை தாழப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே

3. இறந்தார்க்கும் என்றும் இறவா தார்க்கும்
இமையவர்க்கு மேகமாய் நின்று சென்று
பிறந்தார்க்கும் என்றும் பிறவா தார்க்கும்
பெரியான் றன் பெருமையே பேச நின்று
மறந்தார் மனத்தென்று மருவார் போலும்
மறைக்காட் டுறையும் மழுவாள் செல்வர்
புறந்தார் சடைதாழப் பூதஞ் சூழப்
புலியூர்ச் சிற்றம்பலமே புக்கார் தாமே.

4. காரார் கமழ்கொன்றைக் கண்ணி சூடி
கபாலங் கையேந்திக் கணங்கள் பாட
ஊரா ரிடுபிச் சைகொண்டு உழலும்
உத்தமராய் நின்ற ஒருவ னார்தாம்
சீரார் கழல்வணங்குந் தேவ தேவர்
திருவாரூர்த் திருமூலட் டான மேயார்
போரார் விடையேறிப் பூதஞ் சூழப்
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே

5. சந்தித்த கோவணத்தர் வெண்ணூல் மார்பர்
சங்கரனைக் கண்டீரோ, கண்டோம் இந்நாள்
பந்தித்த வெள்விடையைப் பாய ஏறி
படுதலையில் என்கொலோ ஏந்திக் கொண்டு
வந்திங்கென் வெள்வளையுந் தாமும் மெல்லா
மணியாரூர் நின்றந்தி கொள்ளக் கொள்ள
பொன் தீ மணிவிளக்குப் பூதம் பற்ற
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே

6. பாதங்க ளல்லார் பரவி ஏத்த
பத்திமையாற் பணிசெய்யும் தொண்டர் தங்கள்
ஏதங்கள் தீர இருந்தார் போலும்
எழுபிறப்பும் ஆளுடைய ஈச னார்தாம்
வேதங்கள் ஓதியோர் வீணை ஏந்தி
விடையொன்று தாமேறி வேத கீதர்
பூதங்கள் சூழப் புலித்தோல் வீக்கி
புலியூர்ச்சிற் றம்பலமே புக்கார் தாமே

7. பட்டுடுத்துத் தோல்போர்த்துப் பாம்பொன் றார்த்து
பகவனார் பாரிடங்கள் சூழ நட்டம்
சிட்டராயத் தீ ஏந்திச் செல்வார் தம்மை
தில்லைச்சிற் றம்பலத்தே கண்டோம், இந்நாள்
விட்டிலங்கு சூலமே வெண்ணூல் உண்டே
ஓதுவதும் வேதமே வீணை உண்டே
கட்டங்கம் கையதே சென்று காணீர்
கறைசேர் மிடற்றெம் கபாலி யார்க்கே

என்னுந் தேவாரச் செய்யுட்களாற் பாடியிருக்கின்றனர். இச்செய்யுட்கள் திருவாரூர், வேதாரணியம் திருக்கயிலாயம் கும்பகோணம் குற்றாலம் திருவீழி மிழலை முதலன வாய பல ஸ்தலங்களிலுமுள்ள ஏகனாகிய இறைவன் சிற்றம்பலத்தினுட் புகுந்தமையைச் செவ்விதே விளக்கிக்காட்டுகின்றன.

இவர் "பட்டுடுத்து" என்னும் செய்யுளில்தான் உல கத்திலே பல இடங்களிலேயுமுள்ள இறைவனை அந்தச் சிற்றம்பலத்தினுள்ளோ கண்டேன் என்பதனோடமையாது இந்தத் தேவாரத்தையே ஓர் ஆற்றுப்படையாக்கி உல கத்தினரை விழித்து, நீங்களுஞ் சென்று காணுங்கள் என்று கட்டளையுமிட்டிருக்கின்றனர். இஃதேயல்லாது திருவாதவூரிலே அமாத்தியப்பிராமண குலத்திலே பிறந்து மதுரையிலே மந்திரி உத்தியோகம் வகித்துத் திருப்பெருந்துறையில் உபதேசம் பெற்றவராகிய மாணிக்கவாசக சுவாமிகளும் இந்தச் சிதம்பரத்திலேயே பெருமானுரின் திருவடிகளிலிரண்டறக்கலந்தனர். இவர் பாடியருளிய திருவாசகச் செய்யுட்களில் நூற்றிற்கு அறுபதிற்கு மேற்பட்டவை இந்தச் சிதம்பரத்திற்குரி யனவேயாகும். பட்டினத்தடிகள் பாடல்களுமிங்ஙனே, தற்காலத்திலேயும் இங்கு உற்சவகாலங்களில் தேவர் கள் முனிவர்களாதியோர் வேற்றுருவங்களுடன் வந்து நின்று தரிசனஞ் செய்கின்றார்கள்

ஆரார்வந்தார் அமரர்குழாத்தில் அணியுடை ஆதிரைநாள்
நாராயணனொடு நான்முகன் அங்கி இரவியும் இந்திரனும்
தேரார் வீதியிற் தேவர்குழாங்கள் திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ்பாடியும்ஆடியும்பல்லாண்டு கூறுதுமே

என்பது திருப்பல்லாண்டுச் செய்யுள். இனி எத் துணைப்பெரும் பாதகங்களைச் செய்தவர்களாயினும் அவர்கள் பொதுவகையானே சிவசந்நிதானங்களிலும் சிறப்புவகையானே மதுரையில் ஒரு குரோசதூரத்துக் குள்ளும். சிதம்பரத்தில் இரண்டு காதவழி தூரத்திற் குள்ளும் வசிப்பார்களாயின் அவர்களைத்தீண்டப்படாது என்பது இயமதர்மராஜனுக்குச் சிவபிரானாற் கொடுக் கப்பட்ட கட்டளையாகும்.

" சிட்டர் வானவர் சென்று வரங்கொளுஞ்
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலத்துறை
சிட்டன் சேவடி கைதொழச் செல்லுமச்
சிட்டர் பால்அணு காண்செறு காலனே "

என்பது திருநாவுக்கரசுநாயனாரவர்களருளிய தேவாரச் செய்யுள் இதன் சுருக்கப்பொருளாவது, நடராஜப் பெருமானைத் தரிசிக்கப் பிரயாணஞ் செய்கின்றவர்களுக்குச் சமீபத்திற்கும் இயமதர்மன் செல்ல மாட்டான்'' எனபதாகும் இவற்றையெல்லாஞ் செவ்விதே உணர்ந்தவரும் யாழ்ப்பாணத்துத் திருநெல்வேலியில் ஜெனித்தவருமாகிய ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச சுவாமிகள் அவர்கள் இன்றைக்கு ஏறக்குறைய நூற்றைம்பது வருடங்களின் முன்னரே இந்தச் சிதம்பரத்தை அடைந்து நாடோறுஞ் சுவாமி தரிசனஞ் செய்து கொண்டிருந்தனர். அக்காலத்திலே அவர் பரோபகாரார்த்தமாக ஓர் சிறிய குளத்தைத் தோண்டிவைத்தனர். அக்குளமே தற்பொழுது ஞானப்பிரகாசத்திருக்குளம் என வழங்கப்படுகின்றது. இவர் தமிழ்க் கடலிலும் வடமொழிச் சமுத்திரத்திலும் இறங்கி நீந்தி விளையாடி அநேக நூல்களை இயற்றியுள்ளனர் இவரின சமாதி ஆலயம் ஞானப்பிரகாசக்குளத்தின வடபாகங்கலிலேயே நிறுவப்பட்டு இன்றும் பூசிக்கப்படுகின்றது. இதன் பின்னரே ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் ஆங்குச் சென்று வழிபாடு செய்து ஓர் வித்தியாசாலையையும் ஸ்தாபித்தனர் இத்துடன் எங்கள யாழ்ப்பாணத்தவர்களுக்கும் சிதம்பரத்திற்கும் தொடர்பு வரவர அதிகரித்தது. சிதம்பராலய அர்ச்சனை பூசைகளை செய்வதற்காக வென்றே யாழ்ப்பாணத்திற் சில காணிகளை முன்னோர்கள எழுதிவைத்துள்ளனர் ஞானபபிரகாசக்குளத்தின் வடகரையிலும் கிழக்குக்கரையிலும் யாழ்ப்பாணத்தவர்களின் மடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன இவற்றிற்குச் சொத்துக்களுமுள்ளன ஆனல் இவைகள் சரிவரப்பரிபாலிக்கப்படுகின்றனவா, இல்லையா என்பதனைச் செவ்விதே ஆராய்ந்து ஆவன செய்யவேண்டியது நம்மவர்களின் முக்கிய கடமைகளுள் ஒன்றாகும்.

எங்கள் ஈழமண்டலத்தின் சிரமெனப்புகழப்படுகின்ற யாழ்ப்பாணமானது கண்டிப்பகுதியைப் போன்று இயற்கையாகவே நீர்வளம் நிலவளம் பொருந்தியதன்று. இதனல் இங்குள்ளவர்களுட் சிலர் கொழும்பு கண்டி

முதலிய இடங்களுக்குச் சென்றும் சிலர் ஐக்கிய மலாய் நாட்டிற்குச் சென்றும் உத்தியோகங்களை வகித்துப் பெரும் பொருளீட்டித் தாங்களுமனுபவித்துப் பிறர்க்கு முபகரித்து யாழ்ப்பாணத்திற் காடுகளாக இருந்த இடங்களில் மாடமாளிகைகளை அமைத்து அதனைப் பொன்னுலகாக்கினார்கள். தற்பொழுதுமாக்குகின்றார் கள்- இவ்வாற்றானே மலாய் நாட்டிற்குச் சென்றவர் களின் பணவுதவியைப் பெறாத வித்தியாசாலைகளாவது ஆலயங்களாவது வேறு எந்தப் பொதுஸ்தாபனங்களா வது யாழ்ப்பாணத்தில் இல்லவே இல்லை. இங்கு மோட்டார் ரதங்களின் எண்ணிக்கை கூடியதற்கும் அவர்களே காரணகர்த்தாக்களாகும். இங்ஙனே மலாய் நாட்டிலிருந்து பென்சனர்களாகி இங்குவந்து இளைப் பாறியிருக்கின்ற சற்சனர்களாகிய பிரபுக்கள் யாவரு மொருங்கு சேர்ந்து மலாயர் பென்சனர் சங்கத்தை ஸ்தாபித்து நடாத்துகின்றனர். இது சாலவும் மெச் சத்தக்க தொன்றேயாகும். இச்சங்கத் தலைவர்களும் இலங்கையிலுத்தியோகம் வகித்திளைப்பாறியிருப்பவர் களும் ஒருங்கு சேர்ந்து ஞானப்பிரகாசமடங்களைச் சீர் படுத்தி, இங்கிருந்து ஆங்குச் செல்லும் சிவநேயச்செல் வர்கள் வேற்றிடங்கட்குச் சென்று அலைந்து உலைந்து அல்லற்படாது மிகவுஞ் சௌகரியமாகத் தங்கியிருந்து சுவாமிதரிசனஞ் செய்தற்காகியவழிவகைகளை வகுத்து, அதனை ஒருவாற்றானே இலங்கை அரசினருடன் சம்பந் தப்படுத்துங்காரணார்த்தமாகவே இந்து அறநிலயப் பாதுகாப்புச் சபையாரின் அனுசரணையுடன் நிறைவுறச் செய்தல் மிகவும் அத்தியாவசியகம் வேண்டப்படுவ தொன்றாகும். பௌத்த சமயத்திலும் சாது புத்தா விலும் மிக விசுவாசமும பத்தியுமுடையவர்களும் இந்தி யாவில் யாத்திரீகர் விடுதியை ஆக்கியவர்களுமாகிய இல ங்கை அரசினர் அந்தச் சித்தார்த்தரின் ஜனனகாலத் திறைவனுகிய சிவபிரானின் திருத்தலங்களிற் செய்ய வேண்டிய கைங்கர்யங்கட்கு சற்றேனுமட்டியின்றி ஆவன செய்து அவர்களும் இறைவனருட்கடாட்சம் பெறுவர்.

## வாழ்த்து

மழைவ ழுங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வளன் எல்லாம் பிறங்குக
தழைக வைந்தெழுத் தோசை தரையெலாம
பழைய வைதிக சைவம் பரக்கவே.

(உமாபதிசிவாசாரியர்)

# அரும்பதப்பொருள் விளக்கம்

1-ம் 2-ம் பக்கங்கள்

அநந்த — அளவில்லாத

நவரத்தினம்—ஒன்பதுகற்கள்

சுவயம்பு — தானுகத்தோன்றியது

குடகமலை — மேற்குமலை

பிறழாத — குறையாத

சற்றனர் — நல்லவர்கள்

பிரபலியம்—எல்லாராலும் அறியப்பட்ட புகழ்

நிர்வாகம் — ஆட்சி

3-ம் 4-ம் பக்கங்கள்

பிரதிஷ்டைசெய்து—தாபித்து

கர்த்தர் — தலைவர்

அருகி — குறைந்து

வள்ளல் — கணக்கில்லாமல் கொடுப்பவன்

ஆரியம் — சம்ஸ்கிருதம

கிரி — மலை

6-ம் 7-ம் பக்கங்கள்

அருந்தினர்—உண்டார்கள்

பராயம — வயது

அடிசில் – உணவு

நாமகரணம் — பெயர்

8-ம் 9-ம் 10-ம் பக்கங்கள்

எரி — நெருப்பு

மிடி — வறுமை

வெளிப்பிரகாரம்-வெளி வீதி

கலைவாணி — சரஸ்வதி

புவனம் — உலகம்

11ம்-12ம்-13ம்-பக்கங்கள்

இரண்டற — இரண்டில்லாமல் ஒன்ருக

பிருதுவி — மண்

அப்பு — தண்ணீர்

தேயு — நெருப்பு

பாதாரவிந்தம் — காலாகிய தாமரை

அரவிந்தம் — தாமரை

14-ம் 18-ம் 22-ம் பக்கங்கள்

எடுத்துக்காட்டு — உதாரணம்

நிர்ணயஞ்செய்தல் — முடிவுசெய்தல்

ஆற்றுப்படுத்தல் — வழி காட்டுதல்

ஆதிரைநாள் — திருவாதிரைநாள்

நாராயணன் — விஷ்ணு மூர்த்தி

இரவி — சூரிய மூர்த்தி

23-ம் 24-ம் பக்கங்கள்

பரிபாலித்தல் — விருத்தி செய்தல்

சிரம் — தலை

அன்று — அல்ல

சாலவும் — மிகவும்

# அரும்பதப்பொருள் விளக்கம்

1-ம் 2-ம் பக்கங்கள்

அநந்த — அளவில்லாத

நவரத்தினம்--ஒன்பதுகற்கள்

சுவயம்பு — தானுகத்தோன்றியது

குடகமலை — மேற்குமலை

பிறழாத — குறையாத

சற்றனர் — நல்லவர்கள்

பிரபலியம்—எல்லாராலும் அறியப்பட்ட புகழ்

நிர்வாகம் — ஆட்சி

3-ம் 4-ம் பக்கங்கள்

பிரதிஷ்டைசெய்து—தாபித்து

கர்த்தர் — தலைவர்

அருகி — குறைந்து

வள்ளல் — கணக்கில்லாமல் கொடுப்பவன்

ஆரியம் — சம்ஸ்கிருதம்

கிரி — மலை

6-ம் 7-ம் பக்கங்கள்

அருந்தினர்—உண்டார்கள்

பராயம் — வயது

அடிசில் — உணவு

நாமகரணம் — பெயர்

8-ம் 9-ம் 10-ம் பக்கங்கள்

எரி — நெருப்பு

மிடி — வறுமை

வெளிப்பிரகாரம்-வெளி வீதி

கலைவாணி — சரஸ்வதி

புவனம் — உலகம்

11ம்-12ம்-13ம்-பக்கங்கள்

இரண்டற—இரண்டில்லாமல் ஒன்ருக

பிருதுவி — மண்

அப்பு — தண்ணீர்

தேயு — நெருப்பு

பாதாரவிந்தம் — காலாகியதாமரை

அரவிந்தம் — தாமரை

14-ம் 18-ம் 22-ம் பக்கங்கள்

எடுத்துக்காட்டு — உதாரணம்

நிர்ணயஞ்செய்தல் — முடிவுசெய்தல்

ஆற்றுப்படுத்தல் — வழிகாட்டுதல்

ஆதிரைநாள் — திருவாதிரைநாள்

நாராயணன் — விஷ்ணுமூர்த்தி

இரவி — சூரிய மூர்த்தி

23-ம் 24-ம் பக்கங்கள்

பரிபாலித்தல் — விருத்திசெய்தல்

சிரம் — தலை

அன்று — அல்ல

சாலவும் — மிகவும்

உ

கடவுள் துணை

மழவை - மகாலிங்க ஐயரவர்கள்

இயற்றிய

# இலக்கணச் சுருக்கம்

இது
சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியாரவர்கள், பி. ஏ.
பார்வையிட்டது

பதினொன்றாம் பதிப்பு

சென்னை
தாம்ஸன் கம்பெனியாரால்
மினெர்வா அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது

1918

# முகவுரை.

இவ்விலக்கணச் சுருக்கம் இயற்றிய மழவை - மகாலிங்கையர் மிகவுஞ் சிறந்த பிராமணர்; சைவமதத்தில் அதிகம பற்றுள்ளவர். இவர் திருத்தணிகைக் கல்விக்கடல சரவணப் பெருமாளையரை யடுத்து முத்தமிழ்க் கலைகளும முறை யுடனேதி யுணர்ந்து மிகப் பேர்படைத்துச சனஙகளால் மகா வித்துவானென மதிக்கப்பட்டனர். இம்முணர்ந்த துரைத்தனத்தாரும் இவரை யன்புடனுதரித்து கௌரவப் படுத்தினார்கள். இவர் பெரிய புராணத்தில் முதல் 900-செய்யுள்கட்கு உரையும, அருணசல புராணத்திற் குறையும் மழவைச் சிங்காரசதகம் முதலிய பல நூலகளு மியற்றி யிருக்கின்றனர். இவர் அதியற்புத புத்திமான். ஆகவே மிகவும் சொற்சாதுரியம்படப் பேசுவார. இவர் பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்தி லிருந்தவர்.

இனி இப்பதிப்பின் கண்ணே விதிகளை யொழுங்கு படுத்தியும், விதிகளை யுதாரணங்களோடு பொருத்தித் தெளிவாக விளக்கியும், அத்தியாவசியகமான வேறு சில விஷயங்களைச சேர்த்தும், மாணாக்கர்களுக்கு இனிதாக விளக்கும் வண்ணம் அச்சிட்டிருக்கின்றனம. ஆங்கிலக் குறிப்புக்களும் ஆங்காங்குக் காட்டியிருக்கின்றனம.

# இலக்கணச் சுருக்கம்.

## ON LETTERS.

## எழுத்தியல்.

---

### எழுத்தின் பெயரும் எண்ணும்.

1. மொழிக்கு முதற்காரணமாகிய ஒலிக்கு வரிவடிவில் அறிகுறியே எழுத்தாகும்.

இவ்வெழுத்து முதலெழுத்தென்றும், சார்பெழுத்தென்றும் இருவகைப்படும்.

2. உயிரும் மெய்யும் முதலெழுத்தென்றும், உயிர்மெய்யும் ஆய்தமும் சார்பெழுத்தென்றும் சொல்லப்படும்.

3. எழுத்து—உயிர், மெய், உயிர்மெய், ஆய்தம் என நான்கு வகைப்படும்.

4. உயிர் பன்னிரண்டு, மெய் பதினெட்டு, ஆய்தம் ஒன்று, உயிர்மெய் இருநூற்றுப்பதினாறு ஆம்.

### உயிரெழுத்து—Vowels.

5. உயிரெழுத்து-குறில், நெடிலென இருவகைப்படும்.

பிற எழுத்துக்களினுதவியின்றித்தானே தனித்து உச்சரிக்கப்படும் எழுத்து உயிரெழுத்தெனப்படும்.

6. அ, இ, உ, எ, ஒ இவ்வைந்துங் குறில் ஆம்.

குறில் : குறுகியொலிக்குமெழுத்து.

7. ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ இவ்வேழும் நெடில் ஆம்.

நெடில் : நீண்டொலிக்கு மெழுத்து.

## மெய்யெழுத்து.—Consonants.

8. மெய்யெழுத்து—வல்லினம், மெல்லினம், இடையினம் என மூன்று வகைப்படும்.

உயிரெழுத்தி னுதவியின்றித் தானே தனித்து உச்சரிக்கப் படாத எழுத்து மெய்யெழுத்தெனப்படும்.

எப்படி யோருடம்பானது உயிரில்லாவிடின் இயங்காதோ அப்படியே மெய்யெழுத்துக்களும் உயிரெழுத்துக்களில்லாமல் இயங்க மாட்டா.

9. க, ச, ட, த, ப, ற என்ற இவ்வாறும் வல்லினம் ஆம்.

இவை வலிய ஓசையுடன் உச்சரிக்கப்படுவன வாகையினுலே யிப்பெயர் பெற்றன.

10. ங, ஞ, ண, ந, ம, ன என்ற இவ்வாறும் மெல்லினம் ஆம்.

இவை மெல்லிய ஓசையுடன் உச்சரிக்கப்படுவன வாகையினுலே யிப்பெயர் பெற்றன.

11. ய, ர, ல, வ, ழ, ள என்ற இவ்வாறும் இடையினம் ஆம்.

இவை வலிய ஓசையும் மெல்லிய ஓசையுமின்றி அவ்விரண்டிற்கும் நடுத்தரமான ஓசையுடன் உச்சரிக்கப்படுவன வாகையினுலே யிப்பெயர் பெற்றன.

## சுட்டெழுத்து—Demonstrative Letters.

12. அ, இ, உ இம்மூன்றும் சொல்லுக்கு முதலில் அகத்துறுப்பாகவேனும், புறத்துறுப்பாகவேனும் நின்று சுட்டுப்பொருளைத் தருமாயிற் சுட்டெழுத்தெனப்படும்.

(உ-ம்.) அவன், இவன், உவன்—அகச்சுட்டு.
அக்கொற்றன், இப்பலகை, உவ்வீடு—புறச்சுட்டு.

சுட்டுப்பொருளைத் தருதலாவது ஒரு பொருளைக் குறித்துக்காட்டும் அருத்தத்தைக் கொடுத்தலாம்.

அகரம் தூரத்திலுள்ள பொருளையும், இகரம் சமீபத்திலுள்ள பொருளையும், உகரம் நடுவிலுள்ள பொருளையுங் காட்டும்.

அவன் என்பதிலுள்ள அகரம்போலச் சொல்லிற்குள்ளாகவே யோரெழுத்தாய் அமைந்து பிரித்த காலத்து முதனிலையாகிய சுட்டெழுத்து மாத்திரம் பொருள் தந்து நிற்பது அகச்சுட்டு.

அக்கொற்றன் என்பதிலுள்ள அகரம்போலச் சொல்லிற்கு வெளியேயிருந்து பிரித்த காலத்து முதனிலையாகிய சுட்டெழுத்தும் மற்றைப்பகுதியுமாகிய இரண்டும் பொருள் தந்து நிற்பது புறச்சுட்டு.

அறம், இடை, உடு முதலிய சொற்களிலுள்ள அகர இகர உகரங்கள் ஒரு பொருளையுங் குறித்துக் காட்டாமையினாற் சுட்டெழுத்துக்கள் ஆகமாட்டா.

அ, இ, உ என்னும் இம்மூன்றும் அந்த, இந்த, உந்த எனத் திரிந்து வரும்.

## வினாவெழுத்து.—Interrogative Letters.

**13.** ஆ, ஓ சொல்லுக்கீற்றிற் புறத்துறுப்பாகவும், ஏ முதலில் அகத்துறுப்பாகவும், ஈற்றிற் புறத்துறுப்பாகவும், எ முதலில் அகத்துறுப்பாகவும் புறத்துறுப்பாகவும் நின்று வினாப் பொருளைத் தருமாயின் வினா எனப்படும்.

வினாவென்பது கேட்டலாம்.

(உ-ம்.) { தச்சனா=(தச்சன்+ஆ)
தச்சனோ=(தச்சன்+ஓ)
பொன்னனே+பொன்னன்+ஏ) } ஆ, ஓ, ஏ ஈற்றிற் புறத்துறுப்பாக வந்தன.

(உ-ம்.) { எவன்
ஏவன் } எ, ஏ முதலில் அகத்துறுப்பாக வந்தன.

14. யா-என்னும் உயிர்மெய், சொல்லுக்கு முதலில் அகத்துறுப்பாகவேனும், புறத்துறுப்பாகவேனும் நின்று வினப்பொருளைத் தந்தால் வினு எனப்படும்.

(உம்.) { யாவன் / யாங்ஙனம் } யா முதலில் அகத்துறுப்பாகவும் புறத்துறுப்பாகவும் வந்தது.

அகச்சுட்டு, புறச்சுட்டு என்பனபோல வினவின் கண்ணும் அகவினு, புறவினு என்பன உண்டு.

## Related Letters.

15. அகரத்துக்கு ஆகாரமும், இகரத்துக்கு ஈகாரமும், உகரத்துக்கு ஊகாரமும், எகரத்துக்கு ஏகாரமும், ஐகாரத்துக்கு இகாரமும், ஒகரத்துக்கு ஓகாரமும், ஔகாரத்துக்கு உகாரமும், ககரத்துக்கு ஙகரமும், சகரத்துக்கு ஞகரமும், டகரத்துக்கு ணகரமும், தகரத்துக்கு நகரமும், பகரத்துக்கு மகரமும், றகரத்துக்கு னகரமும் இனவெழுத்தென்று சொல்லப்படும்.

இடையினம் ஆறும் ஓரினம் எனப்படும்.

16. உயிர்மெய் யெழுத்தாவது உயிரும் மெய்யுங் கூடிப் பிறக்கும் எழுத்தாம்.

(உ-ம்.) க்+அ=க, க்+ஆ=கா, க்+இ=கி, க்+ஈ=கீ முதலியன.

17. ஆய்தம் குற்றெழுத்துக்குப் பின்னும் உயிரெழுத்தோடு சேர்ந்த வல்லெழுத்துக்கு மேலும் வரும்.

(உ-ம்.) எஃது, கஃசு, இருபஃது.

18. உகரம், மாத்திரையின் சுருக்கத்தாலும், இயல்பாலும், குற்றியலுகரம், முற்றியலுகரம் என இருவகைப் படும்.

## குற்றியலுகரம்.—The Short உ.

**19.** ஒரு குறிலினாலும் இணைந்துவரும் இரண்டு குறிலினாலும் ஆக்கப்படாத மொழியீற்று வல்லின மெய்யின் மேல் ஏறிய உகரம் குற்றியலுகரம் எனப்படும்.

அஃது ஈற்றெழுத்துக்கு அயலெழுத்தை நோக்கி நெடிற்றொடர், உயிர்த்தொடர், வன்றொடர், மென்றொடர், இடைத்தொடர், ஆய்தத்தொடர் என அறுவகையாம்.

(1) ஒரு மொழியின் ஈற்றயலெழுத்து உயிரும் உயிர்மெய்யுமாகிய நெடில்களுளொன்றாகவரின் அது நெடிற்றொடராம்.

(உ-ம்.) ஆடு, காசு, பாடு, ஓது, லோபு, ஏறு.

(2) ஒரு மொழியின் ஈற்றயலெழுத்துத் தனிநெடிலாகாமல் உயிரும் உயிர்மெய்யுமாகிய குறிநெடில்களுளொன்றாகவரின் அஃது உயிர்த்தொடராம்.

(உ-ம்.) அலகு, அரைசு, குருடு, தனது, அறிபு, களிறு.

(3) ஒரு மொழியின் ஈற்றயலெழுத்து வல்லினமாக வரின் அது வன்றொடராம்.

(உ-ம்.) சுக்கு, கச்சு, பாட்டு, பூத்து, பார்ப்பு, பற்று.

(4) ஒரு மொழியின் ஈற்றயலெழுத்து மெல்லினமாக வரின் அது மென்றொடராம்.

(உ-ம்.) சங்கு, நெஞ்சு, வண்டு, வந்து, நம்பு, கன்று.

(5) ஒரு மொழியின் ஈற்றயலெழுத்து இடையினமாகவரின் அஃது இடைத்தொடராம்.

(உ-ம்.) செய்து, பல்கு, சார்பு, தெள்கு, போழ்து.

(6) ஒரு மொழியின் ஈற்றயலெழுத்து ஆய்தமாக வரின் அஃது ஆய்தத் தொடராம்.

(உ-ம்.) எஃகு, கஃசு, பஃது, கஃறு.

☞ நெடிற்றொடர்க் குற்றியலுகர மொழிகளெல்லாம் ஈரெழுத்துடையன. மற்றையாவும் இரண்டுக்குமேற் பட்ட எழுத்துக்களுடையன. இக்குற்றியலுகரமெல்லாம் தமிழ் மொழிக்கேயாம்; வடசொற்களுக்குப் பெரும் பாலுங் கொள்ளப்படா.

### The Full உ.

**20.** தனித்தும், தனிக்குறிலைச் சேர்ந்தும் வரும் வல்லின மெய்களின்மேலும், மெல்லின இடையின மெய்களின் மேலும் வரும் உகரம் முற்றியலுகரமாம்.

(உ-ம்.) கு, து, நடு, பசு, தாணு, சதவு.

### மாத்திரை.—Time-unit of Letters.

**21.** கண்ணிமைப் பொழுதும் கைநொடிப்பொழுதும் மாத்திரைக்களவாம்.

நெட்டெழுத்துக்கு மாத்திரை இரண்டு; குற்றெழுத்துக்கு மாத்திரை ஒன்று; மெய்யெழுத்துக்கும், குற்றியலுகரத்துக்கும், குற்றியலிகரத்துக்கும, ஆய்தத்துக்கும், தனித்தனி மாத்திரை அரையாம்.

உயிர்மெய்க்கு மெய்ம்மாத்திரை ஒழிய ஏறிய உயிர் மாத்திரையே மாத்திரையாம்.

**22.** பண்டமாற்றிலும், விளியிலும், இசையிலும், புலம்பலிலும் உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் தமக்குச் சொன்ன அளவைக்கடந்து நீண்டொலிக்கும்.

## Initial Letters.

**23.** உயிரெழுத்து பன்னிரண்டும், க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ என்னும் ஒன்பதுயிர்மெய்யெழுத்தும் மொழிக்கு முதலில் வரும்.

(உ-ம்.) அடை, ஆடை, இடை, ஈடு, உடை, ஊடல், எடு, ஏடு, ஐயம், ஒதி, ஓதி, ஔவியம்.

உயிர்மெய் யெழுத்துக்களில் ஒற்றொலி முன்னும் உயிரொலி பின்னுமாக வருதலின் மெய்யெழுத்துக்கள் மொழிக்கு முதலில் வருமாறு காண்க.

**24.** ஒன்பது மெய்களிற் க, ச, த, ந, ப, ம என்னும் இவ்வாறு மெய்யும் பன்னிரண்டுயிரோடுங்கூடி மொழிக்கு முதலாகும்.

(உ-ம்.) கடு, கால், கிள்ளை, கீழ்மை, குடில், கூந்தல், கெண்டை, கேழல், கைதவம், கொற்றவன், கோட்டம், கௌவை.

சம்பு, சார்பு, சிறுவன், சீயம், சுகம், சூடகம், செப்பம், சேதகம், சைவம், சொல், சோம்பல், சௌரியம்.

தங்கை, தாளாண்மை, திசை, தீங்கு, துடி, தூய்மை, தெற்றி, தேட்டம், தையல், தொண்டை, தோயம், தௌவை.

நன்மை, நாடு, நிரை, நீட்சி, நுரை, நூல், நெல், நேர்மை, நைதல், நொடி, நோன்பு, நௌவி.

பதி, பாயல், பிதிர், பீழை, புகழ், பூண், பெண், பேதைமை, பையல், பொறுமை, போது, பௌவம்.

மதி, மாளிகை, மின், மீளி, முன், மூங்கில், மெல்லியல், மேடை, மையல், மொழி, மோத்தல், மௌவல் என வரும்.

**25.** வகரம் அ, ஆ, இ, ஈ, எ, ஏ, ஐ, ஔ என்கிற எட்டுயிரெழுத்தோடு மொழிக்கு முதலில் வரும்.

